ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி—2

ஸ்ரீ பகவத்பாதர்கள் அருளிய

# ஸ்ரீ பஜகோவிந்தம்

ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும்



பஜரே கோபாலம் - மானஸ, பஜரே கோபாலம்
பஜ கோபாலம் பஜிதகுசேலம் த்ரிஜகந் மூலம் திதிஸுத காலம் (பஜ)
ஆகமஸாரம் யோகவிசாரம் போகசரீரம் புவநாதாரம் (பஜ)
—ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மம்.

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमद् आद्यशङ्करभगवत्पूज्यपादैः
विरचितम्

श्रीकामकोटि कोशस्थानेन प्रकाशितम्

# ॥ श्री "भज गोविन्द" स्तोत्रम् ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीजगद्गुरु
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादानां
श्रीमुखेन समुल्लसितम्



श्रीकामकोटिर्विजयते

अष्टमं संस्करणम् (संशोधितम्)

श्रीकामकोटिकोशस्थानम्
४, फ्रान्सिस् जोसफ् वीथी, चेन्नपुरी–1.

ஸ்ரீ காமகோடி கிரந்தாவளி : 3

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள்

அருளிய

# ஸ்ரீ பஜ கோவிந்தம்

*ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய*
*ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான*
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
*அருளிய திவ்விய ஸ்ரீமுகத்துடனும்*

ஸ்ரீ ஏ. எஸ். நடராஜ அய்யர், எம்.ஏ., எம்.எல்.

*எழுதிய தமிழ் அனுவாதத்துடனும்*

*குறிப்புரையுடனும் கூடியது*

திருத்திய எட்டாம் பதிப்பு

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-1.

*பதிப்புரிமை* *1962* விலை 50 ந.பை

॥ श्रीः ॥



श्रीमत् परमहंसपरिव्राजकाचार्य श्रीमच्छङ्करभगवत्पाद-
प्रतिष्ठितश्रीकाञ्चीकामकोटिपीठाधीश्वर-
श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वतीश्रीपादैः
क्रियते नारायणस्मृतिः

श्रीमद्भगवत्पादैः सर्वजनोद्धारणार्थम् अनुगृहीतस्य भजगोविन्द-नाम्ना प्रसिद्धस्य सरलसरलस्य मधुरमधुरस्य च मोहमुद्गरस्य मुद्रापणेन प्रचारणेन च आबालम् आपामरं च जगत् विशुद्धान्तः-करणम् भगवद्भक्तिपरवशं च स्यात् इति श्रीगुरुरूपम् भगवन्तम् प्रार्थयामः ॥

मुखाम् :
श्री जंबुकेश्वरक्षेत्रम् स्वभानु सं०.
आषाढ बहुल पञ्चमी
बुधवासरः

इति
नारायणस्मृतिः ।

ஸ்ரீ

முத்திரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத்பாதர்களால் ப்ரதிஷ்டை செய்யப் பெற்ற ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வரர்களான ஜகத் குரு ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்களினால் ஜனங்கள் அனைவரையும் கைதூக்கி விடுவதற்காக அருளப்பட்டதா யும், பஜகோவிந்தம் என்ற பெயரால் பிரஸித்தமானதா யும், ஸரளத்திலும் ஸரளமாயும் (எளிதிலும் எளிதாயும்), மதுரத்திலும் மதுரமாயும் (இனிதிலும் இனிதாயும்) உள்ள மோஹ முத்கரம் என்ற இந்த நூலை அச்சிடுவதனாலேயும் பிரசாரம் செய்வதனாலேயும் குழந்தைகள் பாமரர்கள் உட் பட உலகம் அந்தக்கரண சுத்தியை அடையவேண்டும் என்றும் பகவத் பக்திக்கு பரவசப்பட்டதாய் ஆகவேண்டும் என்றும் ஸ்ரீ குருவின் ரூபமான பகவானை வேண்டிக் கொள்ளுகிறோம்.

முகாம்:
ஸ்ரீ ஜம்புகேச்வர க்ஷேத்ரம்
ஸ்வபானு வருஷம்
ஆடி மாதம்
பஹுள பஞ்சமீ
புதன்கிழமை

இப்படிக்கு
நாராயண ஸ்ம்ருதி:



பஜரே கோபாலம் - மாநஸ, பஜரே கோபாலம்
பஜ கோபாலம் பஜிதகுசேலம் த்ரிஜகந்மூலம் திதிஸுத
காலம் (பஜ)
ஆகமஸாரம் யோகவிசாரம் போகசரீரம் புவநாதாரம்
(பஜ)

—ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மம்

|| ॐ ||

# || श्री भज गोविन्दम् ||

# ஸ்ரீ பஜகோவிந்தம்

---

भज गोविन्दं भज गोविन्दं
भज गोविन्दं मूढमते ।
संप्राप्ते सन्निहिते काले
न हि न हि रक्षति डुकृञ् करणे ॥ १ ॥

1. பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
பஜ கோவிந்தம் மூடமதே |
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ் கரணே ||

गोविन्दं ஸ்ரீ கோவிந்தரை (பகவானை) भज பஜனம் செய் (பக்திசெய்); गोविन्दं ஸ்ரீ கோவிந்தரை (பகவானை) भज ஸேவை செய்; गोविन्दं ஸ்ரீ கோவிந்தரை (பகவானை) भज உபாஸனை செய். (हे) मूढमते (மதி மயங்கிய) மூடனே! संनिहिते काले संप्राप्ते உனக்கு இடப்பட்ட காலம் கிட்டும்பொழுது (அதாவது யமன் வரும்பொழுது) डुकृञ् करणे 'டுக்ருஞ் கரணே' என்ற (தாதுபாடம்) வியாகரண சாஸ்திரமானது न हि न हि रक्षति காப்பாற்றவே காப்பாற்ருது.

**கருத்துரை :** (1) இந்த ச்லோகத்தில், மயங்கிய புத்தியுள்ளவனைப் பார்த்து, "அப்பா, கோவிந்தரைப் பஜனம் பண்ணு; உன்னுடைய மற்ற வித்தையெல்லாம் (நீ கற்றுக்கொள்ளும் வியாகரணம் எல்லாம்) உன்னுடைய கடைசிக் காலத்தில், யமன் உன்னை அழைக்க வரும்பொழுது, உனக்கு உதவியளிக்காது. பகவானுடைய நாமம் ஒன்றுதான் அப்பொழுது உனக்கு முக்தி ஸாம்ராஜ்யத்தைத் தரும்" என்கிறார். (ஆசார்ய. ஆர்ய தர்மம் 12-2-42.)

**கோவிந்த நாமத்தின் பெருமை :** (1) பகவானுக்கு எவ்வளவோ பெயர்கள் இருந்தபோதிலும் கோவிந்த நாமத்தை **இன்றும் என்றும்** சொல்லிக்கொண்டு வருகிறோம். (ஆசார்ய. ஆர்ய தர்மம் 12-2-42.)

(2) "கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்" என்று ஒருவர் சொன்னால், அந்தக் கூட்டத்தில் இருக்கும் அனைவரும் 'கோவிந்தா', 'கோவிந்தா' என்று ஏக மனதாக உரக்கச் சொல்லிப் பகவத் தியானம் செய்கிறார்கள். 'கோவிந்தம் போடுதல்' என்ற வழக்கம் எக்காலத்திலும் உள்ளது. திருப்பதி மலைக்குப் போனால் மலை ஏறும்போதெல்லாம் 'கோவிந்தம் போடு' என்று ஸகல ஜனங்களும் சொல்வதை இன்றைக்கும் காணலாம்; 'கோவிந்த, கோவிந்த!' என்றே சொல்லிக்கொண்டு போகிறார்கள். (ஆசார்ய. ஆர்ய தர்மம் 12-2-42.)

(3) பெரியோர்கள் சாப்பிடும் போதுகூட, 'கோவிந்த, கோவிந்த, கோவிந்த' என்று சொல்லுகிறார்கள். "சாப்பிடும்போது, கோவிந்த என்று

சொன்னால், அந்த மனோபாவத்தோடு அன்னம் உள்ளே போனால், அது பரமாத்ம தியானம் உண்டாக அநுகூலம் செய்யும். கோவிந்த சப்தத்தோடு கூடிய அன்ன ரஸம் உடம்பில் சேரச் சேர ஈச்வர ஞாபகம் உண்டாகும். தினந்தோறும் போஜனம் பண்ணும்போது, 'கோவிந்த' என்ற நாமாவைச் சொல்லவேண்டும். நாம் என்றைக்கும் போஜனத்தை நிறுத்தப் போவதில்லை. இந்த அப்பியாசத்தினால் கோவிந்த நாமோச்சாரணமும் நிற்காது. (ஆசார்ய. வால்யூம் 2, பக்கம் 230.)

(4) கோவிந்த நாமாவை இப்படி இன்றும் என்றும் சொல்லி வருவதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று யோசித்துப் பார்த்தேன். காரணம் புலப்பட்டது. நம் ஆதி ஆசார்யர்கள் (பகவத்பாதர்கள்) 'பஜ கோவிந்தம்' என்ற கிரந்தத்தை எழுதி, கோவிந்த நாமாவைப் பிரசாரத்திற்குக் கொண்டுவந்துவிட்டார்கள். மஹான்கள் ஒரு வார்த்தையைச் சொன்னால் அது கல்பகோடி காலம் ஆனாலும், அழியாமல் வளர்ந்து விளங்கிக் கொண்டு வருகிறது என்பதை இதிலிருந்து நிதர்சனமாக நாம் தெரிந்து கொள்ளலாம். (ஆசார்ய. ஆர்ய தர்மம் 12-2-42.)

**பகவந்நாமாவை எப்பொழுதும் சொல்ல அப்பியாசம் செய்யவேண்டும் :** நாம் அநேக காரியங்களைச் செய்துகொண்டிருந்த போதிலும், பகவானுடைய நாமத்தில் முக்கியமாகத் திருஷ்டி இருக்க வேண்டும். பகவானை அடைய, தியானம் செய்ய வேண்டும். தியானம் முதலில் சற்றுக் கஷ்டமாகத்

தோன்றும். ஆகையால், முதற்படியாகப் பகவான் நமக்குக் கொடுத்திருக்கும் நாக்கைக் கொண்டு நாமாவளியைச் சொல்லிக்கொண்டே யிருக்கவேண்டும். இந்த நாமத்தை ஜபம் செய்ய ஒரு வழக்கம் கொண்டு விட்டால், பிறகு இது சுலபமாய்ப் போய்விடும். நம்முடைய கடைசிப் பிரயாண காலத்தில் பகவந் நாமத்தை ஒரு முறை நினைத்துவிட்டால், அதுவே நமக்கு எல்லாப் பலனையும் கொடுத்துவிடும். ஆகையாலேதான் ஸ்ரீ பகவத்கீதையில் (8. 10) பகவான் இந்த விஷயத்தைச் சொல்லியிருக்கிறார் :—

प्रयाणकाले मनसाऽचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥

ப்ரயாணகாலே மநஸா (அ)சலேந
பக்த்யா யுக்தோ யோகபலேந சைவ |
ப்ருவோர் மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷமுபைதி திவ்யம் ||

சஞ்சலம் அற்ற மனத்தோடும் பக்தியோடும் யோக வலிமையோடும் கூடியவன் சாகுங்காலத்தில் பிராணனை இரண்டு புருவங்களுக்கும் இடையே செவ்வையாக நிறுத்தி அந்தத் திவ்யமான பரம புருஷனை அடைகிறான்.

"அந்தச் சமயத்தில், அதாவது சாகும் சமயத்தில் பகவந்நாமாவைச் சொன்னால் போதும்; அதைப் பற்றி இப்பொழுது என்ன கவலை?" என்று இருந்தால், ஏமாந்து போகவேண்டியதுதான். இன்று முதற்கொண்டே சொல்லி, இந்த நாக்கைப் பழக்கிக் கொண்டு வந்தால்தான் அந்தச் சமயம் பகவந்நாமா

நம் நாக்கில் வருவதற்கும் அதன் மூலமாகப் பகவானை ஸ்மரிக்கவும் முடியும்; பகவத் கீதையில் (8, 5) இதையே பகவான் சொல்லியிருக்கிறார் :

अन्तकाले च मामेव स्मरन् मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥

அந்தகாலே ச மாமேவ
ஸ்மரந் முக்த்வா கலேபரம் |
ய: ப்ரயாதி ஸ மத்பாவம்
யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: ||

எவன் சாகும் சமயத்திலும் என்னையே நினைக்கின்றவனுய்ச் சரீரத்தை விடுகின்றுனே, அவன் எனது நிலையை அடைகின்றுன்; இதில் சந்தேகம் இல்லை. "तस्मात् सर्वेषु कालेषु माम् अनुस्मर" (8, 7)—ஆதலின் எக்காலத்திலும் நீ என்னை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். (ஆசார்ய. ஆர்ய தர்மம் 12-2-42.)

**வியாகரணம் எம்மட்டில் உபயோகம்?** இந்த ச்லோகத்தின் நான்காவது பாதத்திற்கு, 'வியாகரணம் மரண காலத்தில் உபயோகப்படாது' என்று பொருள் விளங்குகிறது; இதனுல் ஸ்ரீ ஆதி ஆசார்யர் வியாகரணம் படிக்கக் கூடாது என்று கண்டித்து விட்டதாக அர்த்தம் கொள்ளக்கூடாது. தர்மஸ்தானம் பதினுன்காவன—நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்பவை. ஆறு அங்கங்களில் வியாகரணம் முகம் போன்றது. வேதத்தின் பொருளை உணர்வதற்கும் அதன் மூலம் ஆத்மலோகத்தில் இன்பத்தை அடைவதற்கும் இன்றி

யமையாத ஸாதனம் என்று வியாகரணத்தின் பிரயோஜனத்தைப்பற்றி விரிவாக நம் ஆசார்ய ஸ்வாமிகள் கூறியுள்ளார்கள். ஆனால், "ஸதா ஸர்வகாலம் வியாகரண சர்ச்சையிலே ஈடுபட்டு, ஆத்ம ஜ்ஞானத்தை மறந்து, பகவானை ஸ்மரிக்காமல் இருந்தால், கடைசிக் காலத்தில் வியாகரண சர்ச்சை பிரயோஜனப்படமாட்டாது" என்று ஆதி ஆசார்யர்கள் கூறுகிறார்கள். இதே பொருளிலே தான் ஆதி ஆசார்யர்கள் 'சிவானந்த லஹரி'யில்(6)—

वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा
पदाम्भोजं शंभोर्भज परमसौख्यं व्रज सुधीः ॥

வ்ருதா கண்டக்ஷோபம்
வஹஸி தரஸா தர்க்கவசஸா
பதாம்போஜம் சம்போர் பஜ
பரமஸௌக்யம் வ்ரஜ ஸுதீ: ||

என்று, "வீணுகத் தர்க்கத்தில் காலம் போக்குகிறுய். சிவனுடைய சரணங்களை அடையவேண்டும். மற்றவை யெல்லாம் பயனற்றவை" என்கிறுர்கள். 'பஜ கோவிந்த'த்தில், "யமன் கிட்டே வந்தால் வியாகரணம் உபயோகப்படாது" என்று சொல்லியிருக்கிறுர்கள். 'சிவானந்த லஹரி'யில் "தர்க்கம் உபயோகப்படாது" என்று சொல்லியிருக்கிறுர்கள். ஒன்று விஷ்ணு ஸ்துதி; மற்றென்று சிவ ஸ்துதி. ஒன்றில் வியாகரணமும் மற்றென்றில் தர்க்கமும் சொல்லப்பட்டிருக்கின்றன. உபயோகமில்லாததில் இந்த இரண்டும் ஒன்றுதான். இரண்டும் ஒரே கருத்தோடு சொன்னவை. எல்லாச் சாஸ்திரங்களுக்கும்

பிரயோஜனம் பக்தி பண்ணுவதுதான். (ஆசார்ய. 2, 229.)

**பஜ—பஜனம். भज सेवायाम्** என்பது தாது பாடம். "பஜனம் என்பதற்கு ஸேவை என்பது தான் அர்த்தம்." (ஆசார்ய. 2, 120.) "பக்தி முக்திக்குப் பூர்வாங்கம்." (ஆசார்ய. 3, 17.) பஜனை, பஜனம், பக்தி, ஸேவை, உபாஸனை இவையெல்லாம் ஒரே பொருள் உள்ளவை.

**संप्राप्ते सन्निहिते काले**—யமன் ஒரு க்ஷணங்கூட வீணாக இருப்பதில்லை. அவன் வந்துகொண்டேயிருக்கிறான்; எத்தனை நாள் ஆயிற்றோ அவ்வளவு தூரம் கிட்டே வந்துவிடுவான். பிரதிக்ஷணமும் வந்துகொண்டேயிருக்கிறான். அவன் எப்பொழுது வருவான் என்பது தெரியாது. வந்தாலும் வராவிட்டாலும் காலனுக்கு யமனாக உள்ளவனுடைய காலைப் பிடித்துக்கொண்டால் கவலையில்லை. (ஆசார்ய. 2, 229.)

**கோவிந்த சப்தத்தின் பொருளும் கோ-ஸம்ரக்ஷணமும்**

'கோவிந்த' என்ற பதம் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் 187, 539ஆவது நாமாக்களாக இருக்கின்றது. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு ஆதி ஆசார்யர் அவர்கள் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். பசுக்களைக் காப்பாற்றுகிறவர் என்பது பொருள். "கோ-ஸம்ரக்ஷணம்" என்பது லோகத்தில் எல்லா ஜாதியார்களும் செய்யக்கூடிய தர்மம்; நாலு வர்ணத்தாரும் இதர ஜாதியாரும் செய்யக்கூடிய தர்மம். கோவானது லோகத்திற்குத் தாயாக இருக்

கிறது. பசுவோ எந்த ஜாதிக்கும் ஆயுள் உள்ள வரையில் பால் கொடுத்து ரக்ஷிக்கிறது. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் சாஸ்திரங்களில் கோவை ரக்ஷிக்கவேண்டும் என்று சொல்லி யிருக்கிறது. பசுவை நன்ருக ஸம்ரக்ஷணை செய்து அதன் கன்றுக்குக் கண்டு பாக்கியுள்ள பாலை ஜனங்களுக்கு உபயோகப்படுத்துமாறு அவ்வளவு நன்ருகப் புஷ்டியாகப் பசுவை ஸம்ரக்ஷிப்பது ஒரு முக்கியமான தர்மம். கோரக்ஷணம் என்ற கார்யத்தை ஈச்வர பக்தியுடன் செய்து பகவானுடைய கிருபைக்குப் பாத்திரராக வேண்டும்.'' (ஆசார்ய. 1, அநுபந்தம் 58, 60, 61.)

मूढ जहीहि धनागमतृष्णाम्
कुरु सद्बुद्धिं मनसि वितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तं
वित्तं तेन विनोदय चित्तम् ॥ भज ॥

2. மூட ஜஹீஹி தநாகமத்ருஷ்ணும்
குரு ஸத்புத்திம் மநஸி வித்ருஷ்ணும் |
யல்(த்)லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ||

धन-आगम-तृष्णां பணம் வருவதில் பேராசையை जहीहि விட்டுவிடு; मूढ விவேகம் இல்லாதவனே! मनसि மனத்தில் वितृष्णां பேராசையற்ற सद्बुद्धिं—सति பரப்ரஹ்மத்தினிடம் बुद्धिं புத்தியை कुरु செய்; निज-कर्म-उपात्तं தன் வர்ண-ஆசிரம விதிகளிலிருந்து வழுவாமல் செய்யப்பட்ட கர்மாவால் அடையப்பட்டதும், தனது பூர்வ கர்மாநுஸாரமாய் அடையப்பட்டதுமான यत्

**वित्तं** எந்தப் பொருளை **लभसे** அடைகின்றாயோ, **तेन** அந்தப் பொருளினால் **चित्तं** (உன்னுடைய) மனத்தை **विनोदय** திருப்தி செய்துகொள்.

**भज गोविन्दं भज गोविन्दं भज गोविन्दं मूढमते** என்பதைப் பல்லவியாக இதற்கும் மற்ற எல்லாச் சுலோகங்களுக்கும் கூட்டிக்கொள்க.

குறிப்பு—**सत्**: ஸத் என்னும் பதம் முக்காலங்களிலும் பாதிக்கப்படாத தன்மையாகிய ஸத்வ ஸ்வரூபமான பரப்ரஹ்மத்தையே ரூடியாகச் சிறப்பாகக் குறிக்கும். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

**सत्** என்னும் பரப்ரஹ்மத்திற்கு 10 வித லக்ஷணம் உண்டு:—நித்யராயும், சுத்தராயும், புத்தராயும், முக்தராயும், ஸத்யராயும், அத்விதீயராயும், ஸூக்ஷ்மராயும், ஸன்மாத்ரராயும், விபுவாயும், ஆனந்தக்கடலாயும் இருப்பவர். இப்பரம்பொருளே தான் நம்மிடம் ப்ரத்யகாத்மாவாக—ஜீவாத்மாவாக இருக்கிறார் என்பது ஸம்க்ஷேப சாரீரகம். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

**नारीस्तनभरनाभीदेशम्**
**दृष्ट्वा मा गा मोहावेशम् ।**
**एतन्मांसवसादिविकारम्**
**मनसि विचिन्तय वारं वारम् ॥** **भज ॥**

3\. நாரீ-ஸ்தந-பர-நாபீ-தேசம்
த்ருஷ்ட்வா மா கா மோஹாவேசம் |
ஏதந்(த்)மாம்ஸ-வஸாதி-விகாரம்
மநஸி விசிந்தய வாரம் வாரம் ||

**नारी-स्तन-भर-नाभी-देशं** *ஸ்திரீயினுடைய ஸ்தன பாரம், நாபி ஆகிய இடங்களை* **दृष्ट्वा** *பார்த்து* **मोह-आवेशं** *மோகமாகிற ஆவேசத்தை* **मा (अ) गाः** *அடையாதே.* **एतत्** *இது* **मांस-वसा-आदि-विकारं** *மாம்ஸம் கொழுப்பு முதலியவைகளுடைய மாறுபாடு என்று* **वारं वारं** *அடிக்கடி* **मनसि** *மனத்தில்* **विचिन्तय** *யோசித்துப் பார்.*

ஞானம் அடைவதற்கு இந்த வைராக்கியம் ஸாதனம்; ஞானம் அடைந்த பிறகும் ஞானம் நிலைப்பதற்கு வைராக்கியம் அவசியம். ஆகையாலேதான் அடிக்கடி வைராக்கியத்தை ஸ்தாபிக்கின்றார். ஞானம் நிலைத்த பிறகும் ஜீவன்முக்தி ஸுகத்திற்கு வைராக்கியம் அவசியம். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

नलिनीदलगतजलमतितरलम्
तद्वज्जीवितमतिशयचपलम् ।
विद्धि व्याध्यभिमानग्रस्तम्
लोकं शोकहतं च समस्तम् ॥ भज ॥

4. *நளிநீ-தள-கத-ஜலமதிதரளம்*
*தத்வஜ்(த்) ஜீவிதமதிசயசபலம் |*
*வித்தி வ்யாத்யபிமாநக்ரஸ்தம்*
*லோகம் சோகஹதம் ச ஸமஸ்தம் ||*

**नलिनी-दल-गत-जलम्** *தாமரை யிலையை அடைந்த ஜலத்துளியானது* **अतितरलं** *மிகவும் சஞ்சலமானது.* **तद्वत्** *அதுபோல்,* **जीवितं** *(நமது) உயிரானது* **अतिशय-चपलं** *மிகவும் நிலையில்லாதது;* **समस्तं लोकं** *உலகம் அனைத்தையும்* **व्याधि-अभिमानग्रस्तं** *வியாதி அகங்காரம்*

இவைகளுக்கு ஆளாகியதென்றும், शोकहतं च சோகத்தால் பீடிக்கப்பட்டதென்றும், विद्धि அறிந்துகொள்.

மேகத்தைப்போலவும் ஒட்டைக் குடத்திலுள்ள ஜலம் போலவும் உயிர் எப்பொழுதும் அழியக் கூடியது என்பதை உணர்ந்து, ஆத்ம ஞானத்தை உடனே அடைய வேண்டும். புல் மேய வேண்டும் காலத்தில் அசைபோடும் மாட்டைப்போல் அனர்த்தத்தை அடையாதே. அழுகின்ற எலியைப் பூனை எப்படி விடாதோ, அப்படி யமன் உன்னை விடமாட்டான். இந்த லோகத்தைப்போல் கர்மாவால் அடையப்படும் மற்ற லோகங்களும் விநாசம் அடைவனவே என்பதைத் அறி. (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

यावद्वित्तोपार्जनसक्तः
तावन्निजपरिवारो रक्तः ।
पश्चाज्जीवति जर्जरदेहे
वार्तां कोऽपि न पृच्छति गेहे ॥ भज ॥

5. யாவத் வித்தோபார்ஜந-ஸக்தஃ
தாவந்(த்)நிஜ-பரிவாரோ ரக்தஃ |
பஶ்சாஜ்(த்) ஜீவதி ஜர்ஜர-தேஹே
வார்(த்)தாம் கோபி ந ப்ருச்ச்தி கேஹே ||

यावत् எதுவரையில், वित्त-उपार्जन-सक्तः பணம் சம்பாதிப்பதில் ஈடுபட்டவனாய் இருக்கிறானோ, तावत् அதுவரை निज-परिवारः रक्तः தன்னைச் சூழ்ந்த மனிதர்கள் தன்னிடம் பிரியமுள்ளவர்களாக இருப்பார்கள்; पश्चात् பிறகு, जर्जर-देहे जीवति (सति) தளர்ந்த தேகத்தோடு உயிருடன் இருக்கும்போது कः अपि எவ

னும் गेहे வீட்டில் (உன் வீட்டிற்கு வந்து) वार्ता யோக க்ஷேமத்தை न पृच्छति விசாரிப்பதில்லை.

यावत् पवनो निवसति देहे
तावत् पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन् काये ॥ भज ॥

6. யாவத் பவநோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குசலம் கேஹே |
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மிந் காயே ||

यावत् எதுவரையில் देहे தேகத்தில் पवनः (மூச்சுக்) காற்று निवसति தங்கி இருக்கிறதோ, तावत् அதுவரையில் गेहे வீட்டில் कुशलं க்ஷேம சமாசாரத்தை पृच्छति விசாரிக்கிறான்; वायौ பிராணவாயு, देह-अपाये தேகத்திற்கு அபாயமேற்பட்டு, गतवति போகும்போது, भार्याः (அண்டிய) மனைவி முதலியவர்களும் तस्मिन् काये அந்த உயிரற்ற சரீரத்தைக் கண்டு बिभ्यति பயப்படுகிறார்கள்.

बालस्तावत् क्रीडासक्तः
तरुणस्तावत्तरुणीसक्तः ।
वृद्धस्तावच्चिन्तासक्तः
परे ब्रह्मणि कोऽपि न सक्तः ॥ भज ॥

7. பாலஸ்தாவத் க்ரீடாஸக்தஃ
தருணஸ்தாவத் தருணீஸக்தஃ |

வ்ருத்தஸ்தாவச்(த்)சிந்தாஸக்தஃ
பரே ப்ரஹ்மணி கோ'பி ந ஸக்தஃ ||

बालः तावत् சிறுவனே என்றால் (பாலனாய் இருக்கும்போது) क्रीडा-सक्तः விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறான்; तरुणः तावत् யுவாவோ என்றால் (யௌவன புருஷனாய் இருக்கும்போது) तरुणी-सक्तः யுவதியினிடத்தில் ஈடுபடுகிறான்; वृद्धः तावत् கிழவனோ என்றால் (கிழவனாய் இருக்கும்போது) चिन्ता-सक्तः கவலையில் ஆழ்ந்து இருக்கிறான்; कः अपि எவனும் परे ब्रह्मणि பரப்ரஹ்மத்தில் न सक्तः ஈடுபடுவதில்லை.

का ते कान्ता कस्ते पुत्रः
संसारोऽयमतीव विचित्रः ।
कस्य त्वं कः कुत आयातः
तत्त्वं चिन्तय तदिदं भ्रान्त ! ॥ भज ॥

8. கா தே காந்தா கஸ்தே புத்ரஃ
ஸம்ஸாரோ (அ)யம் அதீவ விசித்ரஃ |
கஸ்ய த்வம் கஃ குத ஆயாதஃ
தத்த்வம் சிந்தய ததிதம் ப்ராந்த || (பஜ)

ते कान्ता का உன்னுடைய மனைவி யார்? ते पुत्रः कः உன்னுடைய புத்திரன் யார்? अयं संसारः இந்த ஸம்ஸாரமானது अतीव மிகவும் विचित्रः விந்தையாயிருக்கிறது. कस्य त्वं நீ யாருடையவன்? (त्वं) कः (நீ) யார்? कुतः आयातः எவ்விடத்திலிருந்து வந்திருக்கிறாய்? हे भ्रान्त ஏ மூடனே, तत् அந்தப் பரப்ரஹ்மமேதான் इदम् இந்த உன்னுடைய ஜீவாத்மாவாக இருக்கின்றது என்ற तत्त्वम् உண்மையை चिन्तय நன்றாக விசாரி.

तत् इदम् என்பது तत् त्वम् असि என்ற மஹாவாக்கியத்தின் பொருள் ஆகும். तत् என்னும் பதத்திற்கு மாயையுடன்கூடி, ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும் ஈச்வரன் வாச்யார்த்தம். மாயையுடன் சேராத பரப்ரஹ்ம சைதன்யம் லக்ஷ்யார்த்தம். त्वम् என்னும் பதத்திற்கு அஜ்ஞானத்துடன் கூடிய ஜீவன் வாச்யார்த்தம். அஜ்ஞானம் அற்று விளங்கும் ஜீவ சைதன்யம் லக்ஷ்யார்த்தம். இவ்விரு பதங்களின் லக்ஷ்யார்த்தமாய் விளங்குவது ஒன்றாகிய சுத்த சைதன்யமாகிய பரம்பொருளே. सोऽयं देवदत्तः என்னும் நியாயப்படி பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றுதான் என்பது விளங்கும். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

ஸோயம் தேவதத்த: என்னும் வாக்கியம் தர்க்க சாஸ்திரத்தில் 'அன்று அங்கே காணப்பட்ட தேவதத்தனே இன்று இங்கே காணப்படுகிறான்' என்ற பொருளில், அன்று அங்கே என்னும் அடைமொழிகளையும் இன்று இங்கே என்னும் அடைமொழிகளையும் விட்டுவிட்டால் நிற்பது ஒன்றும் தேவதத்தனே என்று விளக்கப்பட்டிருக்கின்றது.

(அத்வைத ஸித்தாந்த வினாவிடை: பக்கம் 12, காமகோடி க்ரந்தாவளி 18.)

सत्सङ्गत्वे निस्सङ्गत्वम्
निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलितत्त्वम्
निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥ भज ॥

9. ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।

*நிர்மோஹத்வே நிஸ்சலிதத்வம்*
*நிஸ்சலிதத்வே ஜீவன்முக்தி: ‖*

**सत्-सङ्गत्वे** *நல்லோர்களுடைய சேர்க்கை ஏற்படும் பொழுது* **निस्सङ्गत्वं** *(பொருள்களிலும் ஆசையின்மை) பற்றின்மை உண்டாகின்றது;* **निस्सङ्गत्वे** *பற்றின்மை உண்டாகவே,* **निर्मोहत्वं** *மோகமற்ற நிலை உண்டாகிறது;* **निर्मोहत्वे** *மோகமற்ற நிலை உண்டாகவே,* **निश्चलितत्वं** *சஞ்சலமில்லாத (சலனம் இல்லாத) ஞான நிஷ்டையும் உண்டாகிறது;* **निश्चलितत्वे** *சஞ்சலமில்லாத ஞான நிஷ்டையும் உண்டாகவே,* **जीवन्मुक्तिः** *(உயிருள்ளபோதே விடுதலை என்ற) ஜீவன் முக்தி நிலை ஏற்படுகிறது.*

*ஜீவன்முக்தி:—ஜீவன்முக்தியைப் பற்றி ஆசார்யர்கள் (ஆசார்ய.* 1, 12—24) *ஒரு தனிப் பிரசங்கம் செய்திருக்கிறார்கள். மோக்ஷம் அடைந்தவர்களுக்குச் சாவு பிறப்பு என்பவை இல்லையாதலால், அவர்கள்* **अमृताः** *என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறார்கள். இந்தச் சரீரம் இருக்கும்பொழுதே சாவில்லாத நிலையைப் பெறலாம் என்பது புருஷஸூக்தமாகிய வேத வாக்கியத்திலிருந்தும் மற்ற வேத வாக்கியங்களிலிருந்தும் கிடைக்கின்றது. பகவத்பாதர்கள் சரீரம் இருக்கும்பொழுதே அதை இல்லாமற் செய்துகொள்வதுதான்* ***அம்ருதம்*** *மோக்ஷம் என்று ஸ்தாபித்திருக்கிறார்கள்.*

**वयसि गते कः कामविकारः**
**शुष्के नीरे यः कासारः ।**

क्षीणे वित्ते कः परिवारः
ज्ञाते तत्त्वे कः संसारः ॥ भज ॥

10. வயஸி கதே கஃ காமவிகாரஃ
ஶுஷ்கே நீரே கஃ காஸாரஃ |
க்ஷீணே வித்தே கஃ பரிவாரஃ
ஜ்ஞாதே தத்த்வே கஃ ஸம்ஸாரஃ ॥ (பஜ)

**वयसि गते** வயது சென்ற பிறகு, **कामविकारः कः** காம விகாரம் என்ன இருக்கிறது? (அதாவது, காம விகாரம் இல்லை என்றபடி.) **नीरे शुष्के** ஜலமானது வற்றிப்போன காலத்தில், **कासारः** ஏரியானது, **कः** என்ன இருக்கிறது? (நீர் வற்றினால் ஏரி என்ற பெயரே இல்லை என்றபடி.) **क्षीणे वित्ते** பணம் குறைந்தபொழுது, **परिवारः** உன்னைச் சுற்றியிருக்கும் பரிவாரம் **कः** என்ன இருக்கிறது? (பரிவாரங்கள் உன்னை விட்டுத் தாமே அகன்று விடுவார்கள் என்றபடி.) **ज्ञाते तत्त्वे** உண்மைப் பொருள் அறியப் பட்டால், **संसारः कः** ஸம்ஸாரம் என்ன இருக்கிறது? (ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் ஆகும்பொழுது, ஸம்ஸாரம் அற்றுப்போகும் என்றபடி.)

**தத்துவ ஞானம்** (உண்மைப் பொருள்). இப் பொழுது முடிவாக நாம் அறிந்துகொள்ள வேண் டியது என்னவென்றால்— 'நிஜம் ஒன்றுதான் இருக்கிறது; எல்லாம் ஈசுவர ஸ்வரூபம்' என்பதே; வாஸனையால் வேறு வேறாகத் தோன்றுகிறது; எல்லாவற்றையும் ஒன்றாக்கவேண்டும். நாம் என்பதையும் கரைக்கவேண்டும். அதற்கு வேண்டிய சாஸ்திரங்களைப்படிக்கவேண்டும். இதற்கு

ஸாதனம் சுருதி, ஸ்மிருதி, புராணம், கோயில் தர்சனம், பூஜை முதலியவை. (ஆசார்ய. 1, 99.)

मा कुरु धनजनयौवनगर्वम्
हरति निमेषात् कालः सर्वम् ।
मायामयमिदमखिलं हित्वा
ब्रह्मपदं त्वं प्रविश विदित्वा ॥ भज ॥

11. மா குரு தநஜந-யௌவந-கர்வம்
ஹரதி நிமேஷாத் காலஃ ஸர்வம் |
மாயாமயமிதமகிலம் ஹித்வா
ப்ரஹ்ம-பதம் த்வம் ப்ரவிச விதித்வா ‖ (பஜ)

**धन-जन-यौवन-गर्वं** செல்வம் சுற்றத்தார் யௌவனம் இவைகளைப்பற்றிய கர்வத்தை, **मा कुरु** கொள்ளாதே; **निमेषात्** ஓர் இமைக்கொட்டு நேரத்தில், **कालः** காலமானது, **सर्वं** எல்லாவற்றையும் **हरति** கொள்ளைகொள்கின்றது (அழிக்கின்றது); **इदं** இந்த ஜகத்-உலகம் **मायामयम्** மாயையின் காரியம் என்று **विदित्वा** உண்மையை அறிந்துகொண்டு **अखिलं** ஸமஸ்தப் பொருளையும், ஸமஸ்த லோகங்களையும் **हित्वा** விட்டுவிட்டு **त्वं** நீ **ब्रह्मपदं** (அந்த) ப்ரஹ்ம நிலையை **प्रविश** அடைவாயாக. (பரப்ரஹ்ம ஜ்ஞானம் மோக்ஷம் என்பது பொருள்.)

இந்த ஜகத் மித்யை(**मिथ्या**) என்பது ப்ரதிஜ்ஞை; காணப்படுவதால் என்பது ஹேது; சுக்தி ரஜதத்தைப் போல் என்பது உதாஹரணம். சுக்தியை ரஜதம் வெள்ளி என்று எண்ணி ப்ரமம் அடைகிறோம். வெள்ளி என்று எண்ணி அதை எடுக்கக் கையைப்

பற்றித் தாவுகிறது முதலிய முயற்சிகளும் செய்கிறோம். உண்மையில் விசாரித்துப் பார்த்தால் அது சுக்தி, சிப்பியேதான். முன்பு ப்ரமத்தால் காணப்பட்ட வெள்ளி வாஸ்தவ ஜ்ஞானம் உண்டானதும் நாசம் அடைந்துவிடுகிறது. அப்படியே உலகத் தோற்றமும் உலகத்தில் நாம் படும் பாடும் வாஸ்தவமான பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் உண்டானல் இல்லாமற் போய்விடும். இது அத்வைதத்தின் முடிந்த கொள்கை. அவித்யா காலத்தில் தோன்றும் ஜகத் முதலான தோற்றங்களையே மித்யாபூதம் என்றும் அவித்யா கார்யம் என்றும் அத்யாஸம் என்றும் ஆதி ஆசார்யர்கள் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் சொல்லுகிறார்கள். அத்யாஸத்தை நீக்குவது தான் வேதாந்தத்தின் பரமதாத்பர்யம். (ஸ்வயம் ப்ரகாசர் வ்யாக்யானம்.)

ஸிருஷ்டி (படைப்பு) ரஜோகுணம்; ஸ்திதி (பரிபாலித்தல்) ஸத்வ குணம், ஸம்ஹாரம் (நாசம்) தமோகுணம்; இம்மூன்றும் சேர்ந்தது மாயை. இந்த குணங்கள் பரமாத்மாவின் ஸ்வபாவமல்ல; காரியங்களின் பொருட்டு அவைகளைக் கிரகித்துக்கொள்ளுகிறார். ஈச்வரர் நிர்க்குணமானவர். குணங்கள் மாயை. 'மா' (मा) என்ற சொல்லுக்கு இல்லை என்று அர்த்தம். யா (या) என்றால் எவள் என்று அர்த்தம். ஆகையால் மாயை (माया) என்றால் 'எவள் இல்லையோ அவள்' என்பது அர்த்தம். வாஸ்தவத்தில் இல்லாததை இருப்பதாக அவர் காட்டுகிறார். (ஆசார்ய 1. அநுபந்தம் 33.)

दिनयामिन्यौ सायं प्रातः
शिशिरवसन्तौ पुनरायातः ।
कालः क्रीडति गच्छत्यायुः
तदपि न मुञ्चत्याशावायुः ॥ भज ॥

12. திந-யாமிந்யௌ ஸாயம் ப்ராத:
சிசிர—வஸந்தௌ புநராயாத: |
கால: க்ரீடதி கச்சத்யாயு:
ததபி ந முஞ்சத்யாசா-வாயு: || (பஜ)

दिन-यामिन्यौ பகலும் இரவும் सायं प्रातः ஸாயங் காலமும் விடியற்காலமும் शिशिर-वसन्तौ சிசிர ருது வும் வஸந்த ருதுவும் पुनः மறுபடியும் மறுபடியும் आयातः திரும்பி வந்துவிடுகின்றன; कालः காலமானது क्रीडति விளையாடுகிறது; आयुः (உனது) ஆயுளானது गच्छति கழிந்துகொண்டே போகிறது; तत् अपि அப் படியிருந்தும் आशा-वायुः ஆசையென்கிற காற்றானது न मुञ्चति விடுகிறதில்லை.

காலம் இந்திரஜால மாயாவியைப்போல், "உன் உயிரைக்கொள்ளை கொள்ளுகிறேன். இதை நீ அறிய வில்லையே!" என்று சிரித்து நம்முடன் விளையாடு கின்றது.

ஆசை என்னும் சண்டமாருதம் நம்மை வதைக் கின்றது. ஒருவனுக்கு, துர்க்கந்தமுள்ளதும் கிருமி களுடன் கூடியதாயும் சண்டால வாடியில் பக்குவ மானதுமான காகமாம்ஸம், நாயால் கௌவப்பட்டு, அதிலும் ஸ்வல்பமாய், அதுவும் துர்லபமானல் எப்படியோ, அப்படி நாம் அநுபவிக்கும் விஷய

போகங்கள் மேற்கூறிய துர்லபத்வம் முதலிய தோஷங்களுடன் கூடினும் நம்மை விடுகின்றதில்லை. (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

का ते कान्ताधनगतचिन्ता
वातुल ! किं तव नास्ति नियन्ता ।
त्रिजगति सज्जनसंगतिरेका
भवति भवार्णवतरणे नौका ॥ भज ॥

13. கா தே காந்தா தந-கத-சிந்தா
வாதுல! கிம் தவ நாஸ்தி நியந்தா |
த்ரிஜகதி ஸஜ்ஜந-ஸங்கதிரேகா
பவதி பவார்ணவ-தரணே நௌகா ‖ (பஜ)

**कान्ता-धन-गतचिन्ता** பார்யை பணம் இவைகளைப் பற்றிய கவலை **ते** உனக்கு **का** எதற்கு? **वातुल** பெரும் காற்றைப்போல் அலைபவனே! **तव** உனக்கு **नियन्ता** சிக்ஷகன் **न अस्ति किं** இல்லையா? **त्रिजगति** இந்த மூன்று லோகங்களிலும் **सत्-जन-संगतिः एका** ஸாது ஜனச் சேர்க்கை என்ற ஒன்றே **भव अर्णव-तरणे** ஸம்ஸார மாகிய சமுத்திரத்தைத் தாண்டுவதில் **नौका** ஓடமாக **भवति** ஆகிறது.

**कान्ता-अधर-गत-चिन्ता** என்று ஸ்வயம்ப்ரகாசரின் பாடம். பார்யையின் உதட்டின் அழகைப் பற்றிய கவலை என்று பொருள். **वातुल** விஷயங்களில் மயங்கிக் கிடப்பவனே! என்றும் பொருள். துராத்மாக்களுக்கு ராஜாக்கள் சாஸ்தா, மறைந்து பாவம் செய்தவர்களுக்கு யமன் சாஸ்தா, ஆத்ம ஜ்ஞானத்தை அடைய வேண்டியவருக்குச் சாஸ்தா

குரு. शास्ता சாஸனம் (உத்தரவு, கட்டளை) செய்பவன். மகான்கள் பக்தி வைராக்கியம் முதலியவைகளை அடிக்கடி ஞாபகப்படுத்திப் புத்தி புகட்டுகின்றூர்கள். மோக்ஷத்திற்கு நான்கு த்வாரம்(வாசற்படி): சமம், விசாரம், ஸந்தோஷம், நான்காவது ஸாது ஸங்கமம். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

जटिलो मुण्डी लुञ्छितकेशः
काषायाम्बरबहुकृतवेषः ।
पश्यन्नपि च न पश्यति मूढो
ह्युदरनिमित्तं बहुकृतवेषः ॥ भज ॥

14. ஜடிலோ முண்டீ லுஞ்சிதகேச:
காஷாயாம்பர-பஹுக்ருதவேஷ: |
பஶ்யந்நபி ச ந பஶ்யதி மூடோ
ஹ்யுதர-நிமித்தம் பஹுக்ருதவேஷ: ‖ (பஜ)

जटिलः ஜடை தரித்தவனாய் இருந்தாலும் मुण्डी முழு மொட்டையாய் இருந்தாலும் लुञ्छित-केशः ஒவ்வொரு கேசத்தையும் பலாத்காரமாய் இழுத்து எடுபட்டவனாய் இருந்தாலும் काषाय-अम्बर-बहु-कृत-वेषः காஷாய வஸ்திரங்களுடன் கூடிய அநேக வேஷங்களைத் தரித்திருந்தாலும் (यः எவன்) पश्यन् अपि பரமாத்ம தத்துவத்தைப் பார்த்துக்கொண்டிருந்தும் न पश्यति பரமாத்ம தத்துவத்தை அநுபவத்திற்குக் கொண்டுவரவில்லையோ (அதாவது, பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடையவில்லையோ) (सः அவன்) मूढः மூடனே; बहु-कृत-वेषः மேற்கூறிய வேஷங்கள் எல்லாம் उदर-निमित्तं हि வயிற்றின் பொருட்டே

யன்றோ ஆகின்றது (ஆத்ம ஜ்ஞானத்தை அடைவிக்க வில்லை யாதலால்.)

லுஞ்சிதகேஶ :—இது ஜைன ஸந்நியாஸிகளைக் குறிப்பது. (ஆசார்ய. 1, 279-280.)

अङ्गं गलितं पलितं मुण्डम्
दशनविहीनं जातं तुण्डम् ।
वृद्धो याति गृहीत्वा दण्डम्
तदपि न मुञ्चत्याशापिण्डम् ॥ भज ।।

15. அங்கம் கலிதம் பலிதம் முண்டம்
தசந-விஹீநம் ஜாதம் துண்டம் |
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத்யாசாபிண்டம் || (பஜ)

अङ्गं தேகமானது गलितं தளர்ந்துவிட்டது; मुण्डं தலையானது पलितं வெளுத்துவிட்டது; तुण्डं வாய் दशन-विहीनं जातं பல்லற்றுப் போய்விட்டது; दण्डं தடியை गृहीत्वा பிடித்துக்கொண்டு वृद्धः கிழவனாய் याति நடக்கிறான்; तत् अपि (தேகம் தளர்ந்து தலை நரைத்துப் பல்லற்ற வாயுடன் கூடி) அப்படியிருந்தும் आशा-पिण्डं ஆசையானது न मुञ्चति விடுகிறதில்லை.

अग्रे वह्निः पृष्ठे भानुः
रात्रौ चुबुकसमर्पितजानुः ।
करतलभिक्षस्तरुतलवासः
तदपि न मुञ्चत्याशापाशः ॥ भज ।।

16. அக்ரே வஹ்நி: ப்ருஷ்டே பாநு:
ராத்ரௌ சுபுக-ஸமர்(ப்)பிதஜாநு: |
கர-தல-பிக்ஷஸ் தருதலவாஸ:
ததபி ந முஞ்சத்யாசா-பாச: || (பஜ)

अग्रे முன்புறத்தில் वह्निः அக்கினியும் पृष्ठे பின்புறத்தில் भानुः சூரியனும் இருக்கின்றன; रात्रौ ராத்திரியில் चुबुक-समर्पितजानुः மோவாய்க்கட்டையில் ஊன்றிய முழங்கால்களை உள்ளவனாகவும் இருக்கிறான்; कर-तल-भिक्षः கையில் பிக்ஷை வாங்கிச் சாப்பிடுபவனாய் तरु-तल-वासः மரத்தடியிலேயே வாஸம் செய்பவனாய் இருக்கிறான். तत् अपि அப்படியிருந்தும் आशापाशः ஆசை என்னும் பந்தமானது न मुञ्चति விலகுகிறதில்லை.

कुरुते गङ्गासागरगमनम्
व्रतपरिपालनमथवा दानम् ।
ज्ञानविहीनः सर्वमतेन
मुक्तिं न भजति जन्मशतेन ॥ भज ॥

17. குருதே கங்கா-ஸாகர-கமநம்
வ்ரத-பரிபாலநமதவா தாநம் |
ஜ்ஞாந-விஹீந: ஸர்வமதேந
முக்திம் ந பஜதி ஜந்மசதேந || (பஜ)

गङ्गा-सागर-गमनं कुरुते மிகவும் கஷ்டசாத்தியமான (கங்கை சமுத்திரத்தில் சேரும்) கங்காஸாகரம் என்னும் புண்ணிய தீர்த்தயாத்திரை போகிறான்; अथवा அல்லது, व्रतपरिपालनं कुरुते விரதத்தை நழுவாமல் நடத்துகிறான்; अथवा அல்லது दानं कुरुते தானம் செய்

கிருன் : ஆனல் **सर्वमतेन** எம்மதத்தாலும் **ज्ञानविहीनः** ஆத்ம ஜ்ஞானமில்லாதவன் **जन्मशतेन** நூறு பிறவிகள் எடுத்தாலும் **मुक्तिं** முக்தியை **न भजति** அடைகிறதில்லை.

**ஞானம்:** "பாவம் பண்ணிேனமென்று பயப்பட வேண்டாம். இந்த உலகத்திலுள்ள ஸகல பாவிகளுக்கும் முதலானவனுக இருந்தாலும் பயம் வேண்டாம். ஞானமாகிய ஓர் ஓடம் தருகிறேன். அதனல் பாவங்களைத் தாண்டிவிடலாம்" என்று பகவத் கீதையில் (4,36) பகவான் சொல்லியிருக்கிருர். ஸ்ரீ ஆதி ஆசார்யர்களும் கீதாபாஷ்யத்தில் (3, 1) **तस्मात् केवलात् एव ज्ञानात् मोक्षः इति एषः अर्थः निश्चितः गीतासु सर्वोपनिषत्सु च** என்கிருர். அதாவது, "ஆகவே, ஞானம் ஒன்றினலேயே மோக்ஷம் என்ற விஷயமானது பகவத்கீதையிலும் எல்லா உபநிஷத்துக்களிலும் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது." (ஆசார்ய. 1, 305.)

**गङ्गासागरगमनम्** கங்கா ஸ்நானமும் சமுத்திர ஸ்நானமும் என்பது பொருள். மற்றும் ஸேது, நைமிசாரண்யம், புஷ்கரம், காசீவாஸம் முதலியவைகளையும் குறிக்கும். **व्रतम्** கிருஷ்ணஜயந்தி, சிவராத்திரி, ஸ்ரீராமநவமி முதலியவை. **दानम्** துலா புருஷம் முதலானவை.

கர்மாவினலேயே ஜனகர் முதலியவர்கள் மோக்ஷம் அடைந்தார்கள் என்பதற்குப் பதில்:—(கர்மாவினலேயே என்னும் பதத்தினல் கர்மா என்பது மோக்ஷத்திற்கும் காரணமாகச் சொன்னதென்று கொள்ளக்கூடாது. அவர்களுக்கும் ஞானத்தாலேயே

மோக்ஷம் ஸித்தித்ததாயினும் ஞானம் வந்த பிறகும் வெளித்தோற்றத்தில் அவர்களிடம் கர்மா காணப் பட்டது என்பதுதான் கருத்து.) நமக்கு இருப்பது அஜ்ஞானம். அதைத் தொலைப்பதற்கு ஞானந்தான் வேண்டும். பழுதையைப் பாம்பு என்று ப்ரமம் கொண்டவனுக்கு, கருடமந்த்ரம், கண்டாநாதம் முதலியன செய்யின் என்ன பிரயோஜனம்? பழுதையைப் பாம்பு என்ற அஜ்ஞானத்திற்குப் பழுதைதான் என்ற ஞானமே மருந்து.

கர்மா சித்தசுத்தியை உண்டாக்கும்; உபாஸனை சித்த-ஐகாக்ர்யத்தை உண்டாக்கும். ஆகவே சித்த சுத்தி சித்த ஐகாக்ர்யத்தின் த்வாரா கர்மா ஞானத்தை அடைய உபாயம் ஆகும். ஞானமும் கர்மாவும் சேர்ந்து இருக்கவேண்டும் என்னும் சில வாக்கியங்களுக்கு, ஜ்ஞானவாஸிஷ்டம் இரண்டாவது ச்லோகம் போன்ற வாக்கியங்களுக்கு, (அபரிபக்வர் களுக்கு) கர்மாவைச் செய்யவேண்டும் என்று கர்மாவை வற்புறுத்துவதுதான் தாத்பர்யமே தவிர வேறு யாதொரு பொருளும் கிடையாது.

ஞானத்தாலேதான் மோக்ஷம் என்பது சாஸ்தி ரங்களின் முழக்கம். ज्ञानादेव कैवल्यम् इति शास्त्रेषु डिण्डिमः (ஸ்வயம்ப்ரகாசர் வியாக்யானம்).

सुरमन्दिरतरुमूलनिवासः
शय्या भूतलमजिनं वासः ।
सर्वपरिग्रहभोगत्यागः
कस्य सुखं न करोति विरागः ॥ भज ॥

18. ஸுர-மந்திர-தரு-மூல-நிவாஸ:
சய்யா பூதலமஜிநம் வாஸ: |
ஸர்வ-பரிக்ரஹ-போக-த்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக: ‖ (பஜ)

सुर-मन्दिर-तरुमूल-निवासः தேவ ஆலயங்களிலும் மரங்களின் அடியிலும் வாஸம் செய்தல் भूतलं शय्या பூமியே படுக்கை वासः अजिनं உடுப்பது மான் தோல் सर्व-परिग्रह-भोगत्यागः பொருள்கள் அனைத்தையும் அவற்றை அநுபவிப்பதையும் விட்டுவிடுதல் (ஆகிய) विरागः ஆசையின்மை कस्य எவனுக்குத்தான் सुखं சுகத்தை न करोति செய்கிறதில்லை? (சுகத்தையே செய்யும் என்பது பொருள்.)

தேவராஜனுக்கும் ஸுகம் இல்லை. சக்கரவர்த்திக்கும் ஸுகம் இல்லை. வைராக்கியத்துடனே கூடியவனுக்குத்தான் ஸுகம். வைராக்கியமுள்ளவன் நல்ல வீடு வஸ்திரம் படுக்கை முதலிய பரிக்ரஹங்களை விட்டுவிடுவான். சில காரணங்களினால் விட முடியாவிடினும், அவைகளினால் உண்டாகும் ஸுகசிந்தை அவனிடம் இராது. இதுவே வைராக்கியத்தின் அறிகுறியாகும். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

योगरतो वा भोगरतो वा
सङ्गरतो वा सङ्गविहीनः ।
यस्य ब्रह्मणि रमते चित्तम्
नन्दति नन्दति नन्दत्येव ॥ भज ॥

19. யோகரதோ வா போகரதோ வா
ஸங்கரதோ வா ஸங்கவிஹீநः |
யஸ்ய ப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ||

योग-रतः वा யோகாப்யாஸத்தில் ரமிப்பவனுய் இருந்தாலும், भोग-रतः वा போகத்தில் ரமிப்பவனுய் இருந்தாலும், सङ्ग-रतः वा ஸங்கத்திலே ரமிப்பவனுய் இருந்தாலும் सङ्गविहीनः वा ஸங்கத்தை விட்டு ஏகாந்தத்தில் இருந்தாலும், यस्य எவனுடைய चित्तं மனஸானது ब्रह्मणि பரப்ரஹ்மத்தினிடத்தில் रमते ரமித்துக் கொண்டு இருக்கிறதோ (सः அவன்) नन्दति नन्दति नन्दति एव நிச்சயமாக ஆனந்தத்தை அடைகிறன்.

"யோகத்தில் இருப்பவரும் வைராக்கியத்தில் இருப்பவரும் எப்பொழுதும் ஆனந்தப்படுகிறர்கள் என்பதில் சந்தேகம் இல்லை; ப்ரஹ்மத்தில் நிலைத்தவருக்குப் போகமோ ஸங்கமோ இருந்தாலும், அவை அவைகளுக்கு உரிய வினையை உண்டாக்குவதில்லை" என்பது பொருள்.

भगवद्गीता किञ्चिदधीता
गङ्गाजललवकणिका पीता ।
सकृदपि येन मुरारिसमर्चा
क्रियते तस्य यमेन न चर्चा ॥ भज ॥

20. பகவத்-கீதா கிஞ்சிததீதா
கங்கா-ஜல—லவ-கணிகா பீதா |
ஸக்ருதபி யேந முராரி-ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யமேந ந சர்ச்சா ||

**येन** – எவனால், **भगवद्गीता** - பகவத் கீதையானது, **किंचित् अधीता** கொஞ்சமேனும் அத்யயனம் செய்யப் பட்டிருக்கின்றதோ **गङ्गा-जल-लवकणिका पीता** (எவனால்) கங்கா ஜலத்தில் ஒரு திவலையாவது பானம் பண்ணப்பட்டிருக்கின்றதோ **सकृत् अपि** ஒரு தடவையாவது, **मुरारि - समर्चा क्रियते** - (எவனால்) (முரனுக்குச் சத்துருவாய்) முரனை ஸம்ஹரித்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் ஆராதனம் நன்ருகச் செய்யப்படுகின்றதோ, **तस्य** - அவனுக்கு, **यमेन** - யமனேடு, **चर्चा** - தகராறு, **न** - இல்லை.

*பகவத்கீதையின் மகிமை:*—"மகாயுத்தம் நடக்கும்பொழுது அர்ஜுனனை வைத்துக்கொண்டு ஜ்ஞானோபதேசம் செய்தார். சரீரஹானி வரும் போது ஜ்ஞானோபதேசத்தைச் செய்துகொண்டிருந்தார். அவரே உத்தம குரு. அவருடைய உபதேசமே உத்தம சாஸ்திரம். அதைக் கேட்டவனே உத்தம சிஷ்யன்." (ஆசார்ய. 1,296). உலகத்தில் யார் எவ்விதக் கேள்வியைக் கேட்டாலும் அதற்கெல்லாம் தகுந்த பதில் கீதாசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது:

"सर्वोपनिषदो गावो दोग्धा गोपालनन्दनः ।
पार्थो वत्सः सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत् ॥"

எல்லா உபநிஷத்துக்களும் பசுக்களாம். அவைகளைக் கறப்பவர் ஸ்ரீ கிருஷ்ண பகவான். அப்பசுக்களின் கன்று அர்ஜுனன். அப்பசுக்களிடம் கறந்த பால் கீதை என்பதாகும். பாலைக் குடிப்பவர்கள் வித்துவான்கள். (ஆசார்ய. 1, 7-8). ஸ்ரீ ஆதி ஆசார்

யர்கள் கீதாபாஷ்யத்தில் 'गीताशास्त्रं समस्तवेदार्थसार-संग्रहभूतम्—கீதை ஸமஸ்த வேதங்களின் அர்த்தங்களுடைய ஸாரத்தைத் திரட்டியது' என்று கூறியுள்ளார்கள். 'ஜன்மம் இல்லாமல் செய்வதற்கு, கீதாசார்யனுகிய பார்த்தஸாரதியும் அதற்கு, பாஷ்யம் செய்த ஸ்ரீ பகவத்பாதர்களும் ஒரேவிதமான அபிப்பிராயத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.' (ஆசார்ய. 1, 307).

पुनरपि जननं पुनरपि मरणम्
पुनरपि जननीजठरे शयनम् ।
इह संसारे बहुदुस्तारे
कृपयाऽपारे पाहि मुरारे ॥ भज ॥

21. புநரபி ஜநநம் புநரபி மரணம்
புநரபி ஜநநீ-ஜடரே சயநம் |
இஹ ஸம்ஸாரே பஹு துஸ்தாரே
க்ருபயா'(அ)பாரே பாஹி முராரே || (பஜ)

पुनः अपि - மறுபடியும், जननं - பிறப்பு; पुनः अपि - மறுபடியும், मरणं-இறப்பு; पुनः अपि-மறுபடியும், जननी-जठरे शयनं - தாயின் வயிற்றில் படுத்தல் (கர்ப்பவாஸம், செய்தல்); इह - இந்த, बहु-दुस्तारे - தாண்டுவதற்கு மிகவும் சிரமமானதும், अपारे-கரையில்லாததுமான, संसारे-ஸம்ஸாரம் என்னும் ஸாகரத்திலிருந்து, (हे) मुरारे – முரனை ஸம்ஹாரம் செய்த ஏ கிருஷ்ண ! कृपया - கிருபையால், पाहि (என்னைக்) காப்பாற்று.

रथ्याचर्पटविरचितकन्थः
पुण्यापुण्यविवर्जितपन्थः ।

योगी योगनियोजितचित्तो
रमते बालोन्मत्तवदेव ॥ भज ॥

22. ரத்யா-சர்(ப்)பட-விரசித-கந்த:
புண்யாபுண்ய-விவர்ஜித-பந்த: |
யோகீ யோக-நியோஜித-சித்தோ
ரமதே பாலோந்மத்தவதேவ ||

**रथ्या-चर्पट-विरचित-कन्थः**-வீதியில் கிடக்கும் கந்தைத் துணியாலே செய்யப்பட்ட ஆடையை உடையவரும், **पुण्य-अपुण्य-विवर्जित-पन्थः**-புண்ணியம், பாவம் இவ்விரண்டையும் விட்ட (மோக்ஷ) மார்க்கத்தில் இருப்பவரும். **योग-नियोजितचित्तः** – யோகத்திலே செலுத்தப்பட்ட சித்தத்தை யுடையவருமான, **योगी** – யோகியானவர், **बाल-उन्मत्तवत् एव** - பாலன் பித்தன் இவர்களைப் போலவே, **रमते** - (ப்ரஹ்மத்தினிடத்தில்) ரமிக்கிறார்.

कस्त्वं कोऽहं कुत आयातः
का मे जननी को मे तातः ।
इति परिभावय सर्वमसारम्
विश्वं त्यक्त्वा स्वप्नविचारम् ॥ भज ॥

23. கஸ்த்வம் கோ'ஹம் குத ஆயாத:
கா மே ஜநநீ கோ மே தாத: |
இதி பரிபாவய ஸர்வமஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்ந-விசாரம் || (பஜ)

**स्वप्न-विचारं** - ஸ்வப்னத்திற்கு ஸமானமானதும், **असारं**-ஸாரமில்லாததுமான, **सर्वं**-ஸமஸ்தமான, **विश्वं**- உலகத்தையும், **त्यक्त्वा** - விட்டுவிட்டு, **त्वं कः** - நீ யார்?

अहं कः-நான் யார் ? कुतः आयातः எங்கிருந்து வந்தவன்? मे जननी का - என்னுடைய தாயார் யார் ? मे तातः कः- என்னுடைய தகப்பனூர் யார்? इति - என்று, परिभावय- விசாரணை செய் (பரிசீலனை செய்).

त्वयि मयि चान्यत्रैको विष्णुः
व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।
सर्वस्मिन्नपि पश्यात्मानम्
सर्वत्रोत्सृज भेदाज्ञानम् ॥ भज ॥

24. த்வயி மயி சாந்யத்ரைகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு: |
ஸர்வஸ்மிந்நபி பச்யாத்மாநம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேதாஜ்ஞாநம் ‖ (பஜ)

त्वयि - உன்னிடத்திலும், मयि - என்னிடத்திலும், अन्यत्र च - மற்ற இடத்திலும் एकः विष्णुः (अस्ति) ஒரே விஷ்ணுவானவர் (ஸர்வ வ்யாபியாக இருக்கிறூர்); (அப்படி இருக்க) असहिष्णुः - பொறுமையற்றவனுய், मयि-என்னிடத்தில், व्यर्थं-வீணுக, कुप्यसि-கோபம் செய் கிறுயே, ஏன் ? सर्वस्मिन् अपि - எல்லாப் பொருள்களி லும், आत्मानं-தன் ஸ்வரூபத்தையே, पश्य – பார்; सर्वत्र- எவ்விடத்திலேயும், भेद-अज्ञानं - பேதத்தைத் தோற்று விக்கிற அஜ்ஞானத்தை, उत्सृज - விட்டுவிடு.

"நான் பரப்ரஹ்மமேதான்" என்பதை உணர்ந்து, அந்த ப்ரஹ்மபாவனையால் பூர்ண ப்ரஹ் மமாய் ஆகிறுய். கழுத்தில் இருக்கும் பொன் சங்கி லியை மறந்தவன்போல் நீ ப்ரஹ்மம் என்பதை அறியவில்லை.

(विष्णुः) வ்யாபநசீல:—(1) எங்கும் அவர் வியாபித்து இருக்கிறார். (2) எதனிலும் புகுந்து இருக்கிறார். பகவான் கர்மாத்யக்ஷராய் ஸர்வ பூதங்களிலும் அதிவாஸராய்—உள்ளே வஸிப்பவராய் ஸாக்ஷியாயும் இருக்கிறார். ஏகத்வத்தை எங்கும் பார்ப்பவனுக்குச் சோகம் மோஹம் ஏது? நீயே உன்னுடன் கோபித்துக்கொண்டால் எப்படியோ, அப்படித்தான் அந்நியருடன் கோபிப்பதும். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

**விஷ்ணுத்வம் : ஈச்வரபாவனை.**

'உலகம் முழுமையும் பரமாத்மாதான்' என்று சாஸ்திரம் சொல்லுகிறது. எல்லாம் பரமாத்மாவாகி விடும்பொழுது, நாம் மாத்திரம் வேறாக இருப்பதற்கில்லை. ஆனால் 'நாம்' என்று ஒன்று தோன்றுகிறது. அதையும் 'பரமாத்மாவின் ஸ்வரூபத்தில் கரைத்து விடவேண்டும். 'நாம்' என்பது வேறாக இல்லாது போவதுதான் அத்வைதம். பழுதையைப் பாம்பு என்று நினைத்தோம். பாம்பு இல்லை என்று தெரியும்போது பழுதைதான் இருக்கிறது. அப்படியே 'நாம்' இல்லையானால், உள்ளது பரமாத்மாதான். அத்வைதத்தில் அகம்பாவம் தொலைகிறது. 'நாம்' என்பது போய்விடுகிறது. எல்லாம் பரமாத்மாவாகிவிடுகிறது. (ஆசார்ய. 3. 14-15.)

शत्रौ मित्रे पुत्रे बन्धौ
मा कुरु यत्नं विग्रहसन्धौ ।
भव समचित्तः सर्वत्र त्वम्
वाञ्छस्यचिराद्यदि विष्णुत्वम् ॥ भज ॥

25. சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்நம் விக்ரஹ-ஸந்தௌ |
பவ ஸமசித்த: ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத் யதி விஷ்ணுத்வம் || (பஜ)

शत्रौ-சத்துருவிடத்திலும், मित्रे-மித்திரனிடத்திலும், पुत्रे-புத்திரனிடத்திலும், बन्धौ - பந்துவினிடத்திலும், विग्रहसन्धौ- சண்டையிலும் ஒன்று சேர்ந்து இருத்தலிலும், यत्नं माकुरु-பிரயத்தனத்தைச் செய்யாதே. अचिरात्-சீக்கிரமாக, विष्णुत्वं-விஷ்ணுத்தன்மையை, वाञ्छसि यदि-விரும்புவாயாகில், त्वं-நீ, सर्वत्र-எல்லா இடத்திலும், समचित्तः-ஸமமான எண்ணத்துடன் கூடியவனாய், भव இரு.

कामं क्रोधं लोभं मोहम्
त्यक्त्वाऽऽत्मानं भावय कोऽहम् ।
आत्मज्ञानविहीना मूढाः
ते पच्यन्ते नरकनिगूढाः ॥ भज ॥

26. காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வா(ஆ)த்மாநம் பாவய கோ'(அ)ஹம்
ஆத்மஜ்ஞாந-விஹீநா மூடா:
தே பச்யந்தே நரகநிகூடா: ||

कामं - காமத்தையும், क्रोधं - கோபத்தையும், लोभं - லோபத்தையும், मोहं - மோகத்தையும், त्यक्त्वा - விட்டு, अहं-நான், कः-யார் (என்று), आत्मानं-தன்னையே, भावय-விசாரணை செய்துகொள். आत्म-ज्ञान-विहीनाः - ஆத்மஜ்ஞானம் இல்லாதவர்கள், मूढाः-மூடர்களே; ते-அவர்கள், नरक-निगूढाः - ஸம்ஸாரமாகிய நரகத்தில் வெகுகாலம்

வைக்கப்பட்டு, **पच्यन्ते** - துன்புறுத்தப்படுகிறார்கள். (ஞானமில்லாதவர்கள் ஸம்ஸாரம் என்கிற ஸாகரத்தைத் தாண்டுகிறதில்லை என்பது பொருள்.)

இங்கு **भावय कोऽहं** என்ற இடத்தில் **पश्यत सोऽहम्** என்ற பாடமும் உண்டு. "ஜீவனாகிய நான் அந்தப் பரமாத்மாவேதான் என்று அறிந்து அநுபவியுங்கள்" என்று பொருள்.

**पश्यत सोऽहम्** என்பது ஸ்வயம்ப்ரகாச யதியின் வ்யாக்யானப்படி மூலத்தின் பாடம்.

காமம், க்ரோதம், லோபம், மோஹம் என்றதால் டம்பம், அஸூயை, அஹங்காரம், பயம் முதலியவையும் குறிக்கப்படும். அவற்றையும் விட்டுவிட வேண்டும்.

**ஈச்வரபாவனை:**—எனக்குப் புத்தியில்லை, நான் அறிவில்லாதவன், நான் கொஞ்சம் அறிவுடையவன் என்பன நமது புத்தியில் தோன்றுகின்றனவே என்றால், இந்தத் தோற்றங்கள் எல்லாம் நான் பரப்ரஹ்மந்தான் என்ற ஸாக்ஷாத்காரம் உண்டாவதற்கு முன்புதான் தோன்றும். கடத்தில் தனியாக ஆகாசம் இருப்பது போல் தோன்றும். கடம் உடைந்து மஹாகாசத்துடன் கலந்தபிறகு எப்படி ஒன்றாகிவிடுகிறதோ, அப்படி நம் தேகத்தில் பரிச்சின்னமாய்த் தோன்றும் ஜீவனின் தேகம் நாசம் அடைந்த பிறகு அது பரமாத்மாவுடன் கலந்து ஒன்றாகிறது. அப்பொழுது தேகம் என்ற உபாதி இல்லாததனால் உண்மை புலப்படுகிறது.

**தோற்றம்:**—நமக்குத் தோன்றுவனவெல்லாம் உண்மையன்று. சந்திரன் எவ்வளவோ மைலுக்கு

அப்பால் பெரிதாக இருக்க, நம் கண்ணுக்குச் சமீபத்தில் சிறியதாக இருப்பதாகத் தோன்றுகின்றது. ஒரு கை அளவிற்குள் அடங்கியதாகத் தோன்றுகின்றது. நமக்குக் கண்ணுக்குத் தோன்றும் ஞானம் எப்படி வானசாஸ்திர ஞானத்தால் பாதிக்கப்படுகிறதோ அவ்வாறே நான் ஞானமில்லாதவன் பரிச்சின்னம் முதலிய தோற்றங்கள் நான் பரமாத்மா தான் என்ற வேதாந்த ஞானத்தால் பாதிக்கப்படுகின்றன.

**நரகம்** என்பது கும்பீபாகம் முதலிய நரகங்களைக் குறிக்கும், அல்லது பிறந்து இந்த உடம்பை அடைவதே நரகமாகும். ஏனெனில், பிரசித்தமான கும்பீபாகாதி நரகங்களைவிட, தேஹாபிமானம் அதிக துக்கத்திற்குக் காரணம்; ஆதலால் மனுஷ்ய ஜன்மம் எடுத்தும் ஆத்மஜ்ஞானம் அடையாதவன் ஆத்மவஞ்சகன்—ஆத்மவைக் கொல்லுகிறவனே (आत्महा) ஆவான். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

## காமம்—குரோதம்

மனிதனுக்கு ஒரு வஸ்து வேண்டும் என்று ஆசையிருக்கிறது. அதை அடையப் பிரயத்தனம் செய்கிறான். நியாயமான வழியில் அகப்படாவிட்டால் அநியாயமான வழியில் முயற்சி செய்கிறான். அது பாவம். அந்தப் பாவத்திற்குக் காரணமாய் இருப்பது 'வேண்டும்' என்னும் ஆசை. அதைத்தான் 'காமம்' என்று சொல்லுவார்கள். அது நமக்கு ஒரு சத்துரு. மற்றொன்று இருக்கிறது, அது 'க்ரோதம்'—கோபம்.

ஒரு வஸ்துவின்மேல் ஆசைப்பட்டால் அது கிடைக்காதபொழுது அதற்குத் தடையாக இருந்தவர்கள் மேல் குரோதம் உண்டாகிறது. ஆசைப்பட்ட பொருள் கிடைக்காதபொழுது கோபம் உண்டாகிறது. காமம் திருப்பப்பட்டபொழுது கோபமாகிறது. ஆதலால் இரண்டையும் ஒன்றென்றே சொல்லி விடலாம், **स एष कामः प्रतिहतः केनचित् क्रोधत्वेन परिणमते** (3, 37) என்று கீதாபாஷ்யத்தில் ஸ்ரீ ஆதி ஆசார்யர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஒரு ஸமயம் காமமாக இருப்பதே கோபமாக மாறுகிறது. (ஆசார்ய. 1. 49-50.)

**गेयं गीतानामसहस्रम्**
**ध्येयं श्रीपतिरूपमजस्रम् ।**
**नेयं सज्जनसङ्गे चित्तम्**
**देयं दीनजनाय च वित्तम् ॥** **भज ॥**

**27.** ***கேயம் கீதா—நாமஸஹஸ்ரம்***
***த்யேயம் ஸ்ரீபதி-ரூபமஜஸ்ரம் |***
***நேயம் ஸஜ்ஜந-ஸங்கே சித்தம்***
***தேயம் தீநஜநாய ச வித்தம் ||***

**गीता-नामसहस्रं** பகவானால் உபதேசிக்கப்பட்ட பகவத் கீதையும் பகவானைக் குறித்துச் சொல்லும் விஷ்ணு ஸஹஸ்ரநாமமும், **गेयम्**-ஸதா படனம் செய்யப்பட வேண்டும்; **श्रीपतिरूपं** - லக்ஷ்மீகாந்தனை ஸ்ரீகிருஷ்ண பகவானின் ரூபம், **अजस्रं ध्येयम्**-எப்பொழுதும் தியானஞ் செய்யப்பட வேண்டும். **सत्-जन-सङ्गे** ஸாது ஜனங்களின் கூட்டத்திலே, **चित्तं**-மனமானது, **नेयम्** - வைக்கப்படவேண்டும். **दीन-जनाय च** ஏழை ஜனங்களுக்கும், **वित्तं**-பொருள், **देयम्** கொடுக்கப்பட வேண்டும்.

**ஸஹஸ்ரநாமாவின் மகிமை :**

பகவானுக்குப் பல நாமாக்கள் இருக்கின்றன; 'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானே' என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆயிரம் நாமாவைச் சொல்லவேண்டும்; ஒரு நாமாவை ஆயிரம் தடவை சொல்லவேண்டும்; ஸித்திபெற்ற பெரியவர்களிடத்தில் அந்த நாமாவைக் கேட்டுக் கொள்ளவேண்டும். (ஆசார்ய. 1, 54.)

**பகவத் கீதையின் பெருமை :**

இந்தப் பகவத்கீதை எல்லா வேதார்த்தங்களின் ஸாரங்களைச் சுருக்கமாய் உபதேசிப்பது என்று ஆதி ஆசார்யர்கள் கீதாபாஷ்யத்தில் கூறியிருக்கிறார்கள், **संसाररोगनिर्मोक्षकारिणीं परां विद्याम् उपदिदेश गीतासु** என்று. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் **भिषक्** என்னும் நாமத்திற்கு (519) பாஷ்யம் செய்கையில், 'பகவானுக்கு வைத்யர் என்று ஏன் பெயர் என்றால் பகவான் ஸம்ஸாரமாகிய ரோகத்தைமுற்றிலும் போக்க, கீதை என்ற உத்தமமான வித்யையை, மருந்தை, உபதேசம் செய்தார்' என்று அநுக்ரஹித்துள்ளார்.

सुखतः क्रियते रामाभोगः
पश्चाद्धन्त शरीरे रोगः ।
यद्यपि लोके मरणं शरणम्
तदपि न मुञ्चति पापाचरणम् ॥ भज ॥

28. ஸுகத: க்ரியதே ராமாபோக:
பச்சாத் த(ஹ)ந்த சரீரே ரோக: |

யத்யபி லோகே மரணம் சரணம்

தததபி ந முஞ்சதி பாபாசரணம் || (பஜ)

रामा-भोगः-ஸ்திரீயோடு சேர்க்கையானது, सुखतः-சுகமாக, क्रियते-செய்யப்படுகிறது; पश्चात्-அதற்குப் பிந்திய காலத்தில், हन्त-ஐயோ, शरीरे-சரீரத்தில், रोगः-வியாதி (உண்டாகிறது); लोके-லோகத்தில், मरणं சாவானது, शरणं यदि अपि - புகலிடம் நிச்சயமாயினும், तत् अपि - அப்படியிருந்தும், पाप-आचरणं - பாவம் செய்வதை, न मुञ्चति - விடுகிறதில்லை.

अर्थमनर्थं भावय नित्यम्
नास्ति ततः सुखलेशः सत्यम् ।
पुत्रादपि धनभाजां भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥ भज ॥

29. அர்த்தமநர்த்தம் பாவய நித்யம்

நாஸ்தி ததः ஸுகலேசः ஸத்யம் |

புத்ராதபி தந-பாஜாம் பீதிः

ஸர்வத்ரைஷா விஹிதா ரீதிः ||

अर्थं-செல்வத்தை, अनर्थं-பிரயோஜனமில்லாததாக, नित्यं - எப்பொழுதும், भावय - எண்ணிக்கொள்; ततः - அந்தப் பொருளாலே, सुख-लेशः-சிறிது சுகமும், न अस्ति-இல்லை. सत्यम् - இது ஸத்யமே. पुत्रात् अपि - பிள்ளையிடத்தினின்றுங்கூட, धनभाजां - பணம் படைத்தவர்களுக்கு, भीतिः-பயம் (இருக்கின்றது); सर्वत्र-எங்கும், एषा रीतिः विहिता-இந்த முறையே (லோக ரீதி) நடப்பு இருந்துவருகிறது. (பணத்தை ஆட்கொல்லி என்று சொல்லுவார்கள்.)

**भावय सत्यम्** அர்த்தம் தோஷம் உள்ளது என்று இடைவிடாமல் சிந்திக்க வேண்டும். இவ்வாறு விஷயம் தோஷமுள்ளது என்பது சிந்தனமாத்திரம் அன்று. உண்மையிலும் அவ்வாறே என்பதை **सत्यम्** என்னும் பதத்தால் ப்ரதிஜ்ஞை செய்கிறார்.

"பணத்தை வைத்துக்கொண்டு புண்ணியத்தைச் சம்பாதிக்க வேண்டும். அறிவில்லாதவன் பாவத்தைத்தான் சம்பாதிப்பான். 'பாவம் சம்பாதிக்கும் அனர்த்தத்திற்குத்தான் அர்த்தம் உபயோகப்படுகிறது' என்று நம் ஆசார்யர்கள் இந்தச் சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்கள். **स मेन्द्रो मेधया स्पृणोतु। ततो मे श्रियम् आवह।** (தைத்திரீய உபநிஷத்) 'ஸ்ரீயைக் கொடு' என்று இதில் சொல்லப்படுகிறது; அதற்கு முன்னே 'புத்தியைக் கொடு' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஆதி ஆசார்யர்கள் இதற்குப் பாஷ்யம் செய்கையில், **एवमादीनि कुर्वाणा श्रीर्या तां ततो मेधानिर्वर्तनात् परम् आवह आनय। अमेधसो हि श्रीः अनर्थायैवेति** 'மேதையில்லாதவனுக்கு ஸ்ரீயைக் கொடுத்தால் அனர்த்தம் உண்டாகும்' என்று எழுதியிருக்கிறார்கள்." (ஆசார்ய. 1, 484.)

**प्राणायामं प्रत्याहारम्**
**नित्यानित्यविवेकविचारम् ।**
**जाप्यसमेतसमाधिविधानम्**
**कुर्ववधानं महदवधानम् ॥** **भज ॥**

30. ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யா(அ)நித்ய-விவேக-விசாரம் |

ஜாப்ய-ஸமேத-ஸமாதி-விதாநம்
குர்வவதாநம் மஹதவதாநம் ||

प्राणायामं - (யோக சாஸ்திரப்படி) பிராணாயாமத்தையும், प्रत्याहारम्-பிரத்யாஹாரத்தையும், नित्य-अनित्य-विवेक-विचारं நித்தியப்பொருள் அநித்தியப்பொருள் என்று பகுத்தறிவதாகிய விசாரணையையும், जाप्य-समेतसमाधि-विधानं-(யோகசாஸ்திரப்படி) ஜபத்தோடு கூடிய ஸமாதியின் முறையையும், महत्-अवधानं - மிக ஜாக்கிரதையாக, अवधानं कुरु- சித்தத்திலே நிறுத்து.

ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், ஸமாதி: — யோகம் என்பது எட்டு அங்கத்தை உடையது. மேற் கூறியவை அந்த எட்டில் மூன்று அங்கங்களாம். யோகம் என்றால் மனத்தை நிறுத்துதல் என்று பதஞ்சலி யோக சூத்திரத்தில் சொல்லுகிறார். மனத்தை அடக்காததனால்தான் நமக்கு எல்லாவிதக் கஷ்டங்களும் உண்டாகின்றன. பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனந்தான் காரணம். (ஆசார்ய. 1, 132-136.)

गुरुचरणाम्बुजनिर्भरभक्तः
संसारादचिराद्भव मुक्तः ।
सेन्द्रियमानसनियमादेवं
द्रक्ष्यसि निजहृदयस्थं देवम् ॥ भज ॥

31. குருசரணாம்புஜ-நிர்ப்பர-பக்த:
ஸம்ஸாராதசிராத் பவ முக்த: |
ஸேந்த்ரிய-மாநஸ-நியமாதேவம்
த்ரக்ஷ்யஸி நிஜஹ்ருதயஸ்தம் தேவம் || (பஜ)

**गुरु-चरण अम्बुज-निर्भर-भक्तः** குருநாதருடைய பாதார விந்தங்களில் மிகவும் தீவிரமான அடங்காத பக்தியை உடையவனாகி, **संसारात्** - ஸம்ஸாரத்தினின்று, **अचिरात्**-சீக்கிரமாகவே, **मुक्तः**-விடுபட்டவனாய், **भव** இரு. **एवं** - இதற்கு முன் சுலோகங்களால் உபதேசிக்கப் பட்ட பிரகாரம், **सेन्द्रिय-मानस-नियमात्** - இந்திரியங்களை யும் மனத்தையும் அடக்கி, **निजहृदयस्थं देवं**-உன்னுடைய ஹ்ருதயத்தில் இருக்கும் பரமாத்மாவை, **द्रक्ष्यसि** பார்ப்பாய்.

***வேதாந்த ஸித்தி*** :—பகவத் பாதத்தை அடையும் வழி.

வேதாந்தம் கேட்டும் சிலர் ஸித்தி அடைவதில்லை. ஏனெனில் அவர்கள் வ்யாகுல சித்தர்கள். அதாவது துர்வாஸனை உள்ளவர், மனோராஜ்யபரர். வித்யா மதம் முதலிய யாதும் இல்லாமல், மனோராஜ்ய பரராய் இல்லாமல் இருப்பவர்கள் ஞானம் அடைவதற்கு அதிகாரிகள். வ்யாகுல சித்தத்தைப் போக்குவதற்கு யோகாப்யாஸம் வேண்டும். அணிமாதிகளை அடையும் வழியைக் கூறும் யோகம் வேண்டாம். குருவினிடத்து வேதாந்தத்தை நன்றாகக் கேட்டு ஸந்நியாஸம் செய்துகொள்ள வேண்டும். வேதாந்த ச்ரவணத்தைப் போல ஸந்நியாஸமும் தத்வஸாக்ஷாத்காரத்திற்கு ஸாக்ஷாத்ஸாதனம். உபநிஷத்தில், கூறப்படும் அகண்ட ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்து, மனோநாசமும் வாஸனாக்ஷயமும் சேர்ந்தால் ஜீவன் முக்தனாக விளங்குவான். அப்பொழுது அந்த ஜீவன் முக்தன் ப்ரஹ்மானந்தத்திலேயே வீற்று இருப்பான். இந்த ஜகத் இந்திர ஜாலம் என்பதை உணர்ந்து

ஜகத்தைப் பார்த்தும் பார்க்காதது போல் இருப்பான். (ஸ்வயம்ப்ரகாசர் வ்யாக்யானம்.)

**குருவின் மகிமை :—**

குருவின் மகிமையைப்பற்றி அதிகம் கூற வேண்டியதில்லை. நமது வேதமானது 'குருவைத் தெய்வமாகக் கொள்' என்று உபதேசித்திருக்கிறது. (ஆசார்ய 3,13.) குருவே பரப்ரஹ்ம ஸ்வரூபம். ஈச்வரனால் விதிக்கப்பட்ட கர்மாவால் மனத்தை உழுதான பின், ஜலம் பாய்ச்ச வேண்டும். அதுதான் பக்தி. ஆசார்ய பக்தி ஈச்வர பக்தியை விட அதிகமானது. குரு பக்தி இருந்தால் மனம் தானகச் சாந்தத்தை அடையும். மனமானது குரு பக்தியில் நனைந்தால், உடனே பலன் உண்டாகும். (ஆசார்ய, 1, 240.)

குருமூலமாகத்தான் சிவஸ்வரூபத்தை அறிந்து கொள்ளவேண்டும்; சிவனைவிட, குரு சிரேஷ்டமானவர். 'शिवे रुष्टे गुरुस्त्राता गुरौ रुष्टे न कश्चन' (ஸூத ஸம்ஹிதை); சிவனுக்கு அபசாரம் செய்தால் அந்த அபசாரத்தைக் குரு மன்னிப்பார். ஆனல் குருவுக்குச் செய்த அபசாரத்தை (சிவன் உள்பட) யாரும் மன்னிக்கமாட்டார்கள். ஆகையால் எந்தக் காரியத்தைச் செய்தாலும் "ஸ்ரீ குருப்யோ நம:" என்று சொல்லி ஆரம்பிக்கவேண்டும். அதனலேதான் ஸ்ரீ ருத்ரத்தில் "நம: ஶங்கராயச" என்று குரு வந்தனம் சொல்லி, அப்புறம் பஞ்சாக்ஷரம் சொல்லப்பட்டு இருக்கிறது. (ஆசார்ய. 2,114.)

**பகவான்—பகவத்பாதம்—பகவத்பாதர்கள்.**

பரமேச்வரர்தாம் உத்க்ருஷ்டமான வஸ்து. அவருடைய பாதம் நமக்கு உத்கிருஷ்டமானது. அந்தப் பாதத்திலேதான் மனத்தை வைக்கவேண்டும். பகவத்பாத ஸ்வரூபந்தான் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள். அவர்களைத் தியானம் செய்வதே பரமேச்வரருடைய சரணாரவிந்த த்யானம் ஆகும். (ஆசார்ய. 1, 302.)

ஆகையால் நாம் நம்முடைய மனம் சுத்தமாக இருப்பதற்காக, நித்ய சிரேயஸ்ஸை அடைவதற்காக, பகவத் பாதத்தை அதாவது ஆசார்யரூபமான சரணத்தைத் தியானம் பண்ணவேண்டும். மனம் அதற்குத்தான் ஏற்பட்ட இடம். (ஆசார்ய. 1,306.)

கோவிந்த பகவத்பாதர்கள் ஸ்ரீஆதிஆசார்யர்களுடைய குரு; தங்களுடைய குருவைத் தியானம் செய்யும் பொருட்டும் நம் ஆசார்யர்கள் பஜகோவிந்தம் என்ற கிரந்தத்தைச் செய்தார்கள். அதில் மஹாவிஷ்ணுவின் பெயரும் ஆசார்யர்களுடைய குருவின் பெயரும் கலந்து வருகின்றன. (ஆசார்ய. 3, 119.)

|| इति मोहमुद्गरः संपूर्णः ||

|| ओं ||  || शुभम् अस्तु ||  || ओं तत् सत् ||



ஸ்ரீ சந்திரமௌளீச்வராய நம:

# ஸ்ரீகாமகோடி கோசஸ்தானத்தின் வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யர்களுடைய அநுக்ரஹ பூர்வமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

ரூ. நபை.

1. ஸ்ரீ பஜ கோவிந்தம்—(ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும்) .... .... .... 0—50
2. ஸ்ரீ முகுந்தமாலா—ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளியது. ஸாஹிதீ வல்லப ஸ்ரீ T. ஸுந்தராசார்ய ஸ்வாமி, பி.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் உரையுடன் கூடியது. 0—50
3. ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியதை ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் தமிழில் உபதேசித்தது. (தமிழ் லிபியில்) 0—25
4. ஷை (தெலுங்கு லிபியில் தெலுங்கு அனுவாதத்துடன்) 0—25
5. ஸ்ரீ மூகபஞ்சசதீ—(தமிழுரையுடன்) .... 2—00
6. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், எம்.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும், ராவ்சாஹிப் N. நடேச அய்யர் அவர்கள் எழுதிய ஆங்கில முன்னுரையுடன் கூடியது .... 0—87
7. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், ஸ்ரீமத் ஆதிசங்கர ஸ்ரீ பகவத் பாதர்கள் பாஷ்யத்திற்கு ஸ்ரீ வே. நாராயணன், M.A., M.L., செய்த தமிழ் அனுவாதமும், மஹாமஹோபாத்யாய வித்தியாவாசஸ்பதி, ப்ரொபஸர் குப்புசாமி சாஸ்திரி அவர்கள் எழுதிய முகவுரையுடனும் கூடியது (அச்சில்) .... 2—00
8. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்க்ருதத்தில் .... 0—19
9. —ஷை—தமிழில் ச்லோகம், நாமாளியும் .... 0—25
10. ஸ்ரீசிவபாதாதிகேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் ப்ரஹ்மஸ்ரீ V. H. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் எழுதிய தமிழ் அனுவாதங்களும், திவான் பகதூர் K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகள் எழுதிய முன்னுரையுடனும் கூடியது. 0—94
11. அத்வைத ஸபை அக்ஷர மாலிகா—(51 ஸம்ஸ்க்ருதக் கட்டுரைகள் அடங்கியது) .... .... .... 5—00
12. அத்வைத ஸபை பொன் விழா நினைவு மாலை—(தமிழில் 23 கட்டுரைகள் அடங்கியது.) .... .... 3—00

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்

4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-1